9th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) There is no public sports stadium at Tiruchirappalli. The St. Joseph's College, Tiruchirappalli, owns a small sports stadium to be used by the College.

(b) No, Sir.

(c) Does not arise.

SRI S. LAZAR : Is it not a fact that a special grant is available from the Union Government for the purpose of establishing such a sports stadium and if so, will the Government consider the selection of Tiruchirappalli which is at the heart of Tamil Nad, for the purpose of establishing one such stadium?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir, if the proposal comes from Tiruchirappalli, it will be considered.

*Hospitals.*

*106 *Q*.—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவினியூ அமைசசர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, தேனி, அல்லி நகரில் ஒரு ஆஸ்பத்திரி வைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI N. R. THIAGARAJAN : எங்கள் தேனி நகரத்தில் 20 ஆயிரம் மக்கள் இருக்கிறார்கள். சுற்றுப்புறத்திலும் இரண்டு லட்சம் இருக்கிறார்கள். ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டுமென்றால் பத்து மைல்கள் போகவேண்டியிருக்கிறது. சீக்கிரத்தில் அங்கே ஒரு ஆஸ்பத்திரியை அமைக்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இது ஜில்லா போர்டினுடைய பொறுப்பாக இருக்கிறது. பஞ்சாயத்து ஏரியாவாக இல்லாத இடங்களில்தான் சர்க்கார் வைக்கும்.

* 107 *Q*.—SRI N. R. THIAGARAJAN : கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

ஒவ்வொரு மேஜர் பஞ்சாயத்து நகரிலும் 10 படுக்கைகள் கொண்ட ஆஸ்பத்திரி ஒன்றை வைக்க உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.

SRI N. R. THIAGARAJAN : இருபதாயிரம் மக்கள் கொண்ட பஞ்சாயத்து போர்டுகளில் ஆஸ்பத்திரிகளை அவசியம் ஏற்படுத்த வேண்டும். குறிப்பாக, கோம்பை, நெய்க்காரப்பட்டி, தேவதானப்பட்டி, ஆயக்குடி, தேனி முதலிய இடங்களில் ஆஸ்பத்திரிகள் வைப்பதைத் தனிக் கொள்கையாக அங்கீகரிக்கவேண்டுமென்று அரசாங்கம் முடிவு செய்யுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது அரசாங்கம் ஒரு புதுக் கொள்கையை வகுத்திருக்கிறது. அதாவது ஸ்தல ஸ்தாபன நிர்வாகம் சம்பந்தமாக மாவட்ட வளர்ச்சி மன்றங்களை அமைக்க உத்தேசித்திருக்கிறோம். ஆஸ்பத்திரி ஏற்படுத்துவதுதான் அரசாங்கத்தின் பொறுப்பு. டிஸ்பென்சரி ஏற்படுத்துவது யூனியன் பொறுப்பாக இருக்கும்.